





# வீரசைவ கிரியா விதானம்





ஸ்ரீ ரேணுகாச்சாரியார் துணை

வெளியிடுவோர் :

ஆத்மகூர் R. A. கமலபதி பண்டாரம் & பிரதர்ஸ்
குகை, சேலம் – 6

ஈஸ்வர சேவையால் அதிர்ஷ்ட பலன் உண்டு
- புண்ணிய பலன்.

குரு சேவையால் அதிர்ஷ்ட பலன், திர்ஷ்ட
பலன் 2-ம் உண்டு.

- புண்ணிய பலன் – உபதேச பலன் 2-ம் உண்டு.

## அனுபந்தம்

### லிங்க லக்ஷணம்

பீடம்-படி - நிதம்பம் - கோமுகம் - மேல் மட்டம் - நாளத்தடி இந்த ஆறு அங்கத்தினை உடைய லிங்கமூர்த்தியும்

### பஞ்சமுகம்

ஈஸானம் - தத்புருஷம் - அகோரம் - வாமதேவம் - சத்யோஜாதம்

### பஞ்சசக்தி

க்ரியாசக்தி - ஞானசக்தி - இச்சாசக்தி - ஆதிசக்தி - பராசக்தி

### பஞ்சகலை

நிவர்த்திகலை - ப்ரதிஷ்டாகலை - வித்யாகலை - சாந்திகலை - சாந்தீ யதீதகலை

### பஞ்சஸாதாக்யம்

கர்மசாதாக்யம்-கர்த்துருசாதாக்யம்-மூர்த்திசாதாக்யம்-அமூர்த்தி சாதாக்யம் - சிவசாதாக்யம்

### பஞ்சதத்துவம்

அகாரம் - உகாரம் - மகாரம் - நாதம் - பிந்து

### பஞ்ச அக்ஷரம்

ந - ம - சி - வா - ய

இந்த ஆறு லக்ஷணமும் ஒருங்கே அமையப்பெற்று ஏகரூபமாய் விளங்கும் லிங்கஸ்வரூபத்தை கரதலாகமலத்தில் வைத்து த்ரிகரண சுத்தியுடன் பூஜிப்போமாக. இதில் ப்ரவிர்த்தி மார்க்கம் - ந்வ்ருத்திமார்க்கம் ஏன 2 மார்க்கங்கள் உண்டு.

லிங்கத்தை ப்ரதிஷ்டை செய்து பூஜிப்பது ப்ரவிர்த்தி மார்க்கம் லிங்கத்தை அங்கத்தில் வைத்து பூஜிப்பது ந்வ்ருத்தி மார்க்கம் ந்வ்ருத்தி மார்க்கத்தை உபதேசித்தர்பொருட்டு ஸ்ரீ பரமேஸ்வரன் பஞ்ச முகத்தில் இருந்து பஞ்சகணேசர்கள் உற்பவித்தார்கள்.

## அதன் விவரம்

| ஸ்ரீ பரமேஸ்வரன் பஞ்சமுகங்கள் | க்ரேதாயுகம் உற்பவித்தவர் | திரேதாயுகம் உற்பவித்தவர் | துவாபரயுகம் உற்பவித்தவர் | கலியுகம் உற்பவித்தவர் |
| --- | --- | --- | --- | --- |
| சத்யோஜாதம் | கண்டாகர்ணர் | ஏகாக்ஷரர் | ஏகமுகர் | ஏகோராமராத்யர் |
| வாமதேவம் | கஜகர்ணர் | த்வியாக்ஷரர் | த்விமுகர் | பண்டிதாராத்யர் |
| அகோரம் | ரேணுகர் | த்ரியாக்ஷரர் | த்ரிமுகர் | ரேவண சித்தர் |
| தத்புருஷம் | தாருகர் | சதுராக்ஷரர் | சதுர்முகர் | மருள சித்தர் |
| ஈஸானம் | விஸ்வகர்ணர் | பஞ்சாக்ஷரர் | பஞ்சமுகர் | விஸ்வாராத்யர் |

கலியுகத்தில் இப்பஞ்சமுககணேஸ்வரர்களே வேறு வே று நாமங்களில் பஞ்சலிங்கங்களில் உற்பவித்து பஞ்சபிர்ம்ம கலசங்களை பூலோகத்தில் ஸ்தாபித்து ருத்விஜர்களாகி வீரசைவர்களுக்கு தீக்ஷானுக்ரஹம் செய்து இப்பொழுது என் சன்னதியில் இருந்தபடியே கலியுகத்தில் வீரசைவ வம்சோத்பவர்களுக்கு தீக்ஷா நுக்ரஹம் செய்வித்து தங்கள் வம்ஸத்தவர்களை பூலோகத்தில் விட்டு பிறகு என் சன்னிதி அடை கின்றூர்கள் என்று ஸ்ரீ பரமேஸ்வரன் ஸ்ரீ பார்வதி தேவியாருக்கு சொன்னதை வீரசைவ தர்ம சிந்து முதலிய க்ரந்தங்களில் காணலாம்.

வீரசைவர்களுக்கு உரிய கோத்ரங்கள் :

ப்ருங்கிகணம் - வீரகணம் - விருஷகணம் – ஸ்கந்தகணம் - ஹந்திகணம் இப்படி பஞ்சகோத்ரங்களாகும்.

# வீரசைவக்ரியாவிதானம்!

## பொருள் அடக்கம்



**இதை படிக்கும் அன்பர்களுக்கு**

க-ச-த-ப-ட-இது ஒவ்வொன்றுக்கும் 4 உச்சரிப்பு உண்டு. இதற்கு பதில் பெரிய எழுத்துக்களில் பிரிண்ட் செய்துள்ளது. அதைப் பார்த்து உச்சரிக்கவும்.

  

ஊருக்கும் நாட்டுக்கும் தலைமை தாங்கும் மனப் பாங்கு உடையவர்கள் ஆவோம். சமூகத்திற்கு தொண்டர்கள் என்ற மனப்பாங்கு உண்டாகட்டும்.

உ

## ஸ்ரீ கணபதி வணக்கம்

கஜானனம் மஹாகாயம் வக்ரதுண்டமு மாஸிதம்
விக்னதம் விக்னஸம்ஹாரம் ப்ரணதோஸ்மி வரப்ரதம்

அரியானையயன் மாலுக்ககண்ட பேரொளியானைத்
தெரியானை யன்பிலர் தந்தேக மனவாக்கதனுக்
குரியானை யன்பர்தமக்குயர் பெரியாளீன்றெடுத்த
பெரியானைக் கணபதியின் பிறங்கிய பொற்பதம் பணிவாம்

## ஸ்ரீ பரமசிவ வணக்கம்

சீர்பூத்த செஞ்சடையிற் சுரநதியுங் கரமதியும் செறிந்திலங்க
வார்பூத்த குயவனிதை யொருபுரத்திற் பசந்தொளிர வாரியுண்ட
கார்பூத்த மணிவண்ணன் கட்கமலமிணைக்கமலக் கழலின்மேவ
ஏர்பூத்த கோவலில்வாழ் வீரட்டத்தொருமுதலை இறைஞ்சுவோமே

உ

சிவமயம்

# சிறப்புரை

ஆதியோடு அந்தம் இல்லாத பரம்பொருள்; ஆன்மாக்கள் பசு பாசங்கள் நீங்கி, தன்னை அடைந்து துக்க நிவர்த்தியும் ஆனந்த ப்ராப்தியும் அடைவிப்பான் வேண்டி தன்னுள் ஒடுங்கிய ப்ரபஞ்சத்தை மீளவும் ஆக்குவித்தற்காக சங்கல்பம் செய்தார்: அதன்படி முதற்கண் ப்ரம்மாவை சிருஷ்டித்தார். உலகத்தைப் படைக்கும் உபாயத்தைக் கூறி

அருளி படைப்புத் தொழில் செய்யக் கட்டளை இட்டார். ப்ரம்மன் தன்க்கு உரிய மயக்க உணர்வால், படைக்கும் தொழிலில் புகுந்து, படைப்புத் தொழில் செய்ய முற்பட்டார். ஆனல் படைக்கும் திறன் அவருக்கு உண்டாகவில்லை. மீண்டும் ஸ்ரீ பரமேஸ்வரனை அணுகி, "படைக்கும் தொழில் பெற்றிலன் ஆகவே நன்ருக விளங்குமாறு அருள் செய்ய வேண்டும் என்று பலவாருக, ஸ்தோத்திரம் செய்து நிற்க, ஸ்ரீ பரமேஸ்வரன் அவன் கூறியவண்ணம், விளக்கமாகக் கூறியும், அவனது மயக்க உணர்வால் ஏதும் அறியாதவனுகி மீண்டும் சன்னதியில் வணங்கி, ஸ்தோத்திரம் செய்து "சகல ப்ரபஞ்சத்திற்கும் காரணம் ஆனவரும், முழுதும் உணர்ந்தவரும், பேராற்றல் உடையவரும், க்ருபாறுவும் ஆகிய தாங்கள் அடியேன்மீது தயை கூர்ந்து படைக்கும் தொழிலைத் தாங்களே செய்து காட்டினலன்றி அறியாமைமிக்க எனக்கு, படைக்கும் தொழில் விளக்கம் உருது" என்று மிக இறைஞ்சி வேண்டிக்கொண்டான். ஸ்ரீ பரமேஸ்வரன் ப்ரம்மாமீது க்ருபை கூர்ந்து, தனது சத்யோஜாதம் முதலிய ஐந்து முகங்களிலிருந்தும், ரேணுகர் தாருகர், கண்டாகர்னர், கஜகர்ணர், தேனுகர்ணர், ஆகிய ப்ரதம கணங்களை முதன் முதலில் தோற்றுவித்தார். அதனைப் பார்த்து ப்ரம்மனும் ஐயம் தெளிந்து, ப்ராகிருதமாகிய ப்ரபஞ்சத்தைப் படைக்க லானுன். ஸ்ரீ பரமேஸ்வரன் முதற்கண் படைத்த படைப்பு, அப்ராக்ருதம் எனப்படும். ப்ரம்மன் படைத்த படைப்பு ப்ராக்ருதம் எனப்படும். ப்ரம்ம சிருஷ்டியில் ஆன்மாக்களுக்கு, வருணுசிரம தர்மங்களும், உயிர்கள் ஸ்வர்க்கம் முதலிய உலகங்களில் சுகம் அனுபவித்தற் பொருட்டு கர்ம தர்மங்களையும், வேள்வி முதலான பல தெய்வ வழிபாடும், இவற்றிற்குரிய வேத வசனங்களும், இயற்றப்பெற்று, அபர வித்தையை ஆக்கிக் கொடுத்தான். ஸ்ரீ பரமேஸ்வரன் அப்ராகிருதப் படைப்பில், ஞானமும் அதற்குத் துணையான தர்மங்களும், பக்தி, ஞானம், வைராக்யம் முதலியன சொல்லும் வேதாந்தமும் அதனை விளக்கிக் கூறும் ஆகம சாஸ்திரங்களும் இயற்றப்பட்டன. இதனல் ஆன்மாக்கள், பந்தம் நீங்கி, பரமுக்தியை அடையும் மார்க்கத்தைக் கூறும் இதற்கு, பரவித்தை என்று

சாஸ்திரங்கள் உயர் கூறும். இந்த [illegible] ஐந்து எக்ஞுங்கள் அனுஷ்டிக்கவேண்டுமென்று கூறுகின்றன. அவை ஆவன, கர்மம், தபஸ், ஜபம், த்யானம், ஞானம் எனப்படும். இங்கு கர்மமாவது; தேவர்களுக்கு அவிசு கொடுத்து, திருப்திபடுத்தும் வேள்வி அல்ல

சிவபெருமானுடைய இஷ்டலிங்க பூஜையும், குருலிங்க ஜங்கமர் களுக்கு செய்யும் நற்பணியுமே கர்மம் எனப்படும். தபஸாவது — பஞ்சாக்னி முதலியவற்றில் நின்று சரீரத்தை தண்டித்தல் தபசு அல்ல.

**சிவபூஜை,** குரு, **லிங்க** ஜங்கம பூஜைகளில் தனக்குண்டாகும் இன்னல்களைத் தாங்கி, வழுவாது செய்தலே தபசு எனப்படும். ஜபமாவது — சதருத்ரீயம், ப்ரணவம் முதலிய உபநிஷத்துக்களை, சதா பாராயணம் செய்தல் **ஜபம்** எனப்படும். த்யானமாவது — ப்ரணவம் பஞ்சாக்ஷரம், முதலிய சிவநாமங்களைத் தெரிந்து இறைவன் திருவருள் கோலத்தை விடாது சிந்தித்தல் **த்யானம்** எனப்படும்.

ஞானமாவது — பாசலக்ஷணம், பசுலக்ஷணம் பதிலக்ஷணம் ஆகியவற்றைக் குருமுகமாக கற்றல் கேட்டல், தெளிதல் ஆகியவற்றைக் கைக்கொண்டு திருவருளை நோக்கி நிற்பது **ஞானம்** எனப்படும்.

இந்த ஐந்து வேள்விகள் பரவித்தைக்கு உரியவை. இவற்றில் முதற்கண் நின்ற குரு, லிங்க, ஜங்கம, பணி ஆற்றுதல், சிவபூஜை. இவற்றிற்கு அடிப்படையானது. அவற்றில் சிவபூஜை செய்யும் முறை வேத சம்பந்தமாகிய மந்திரங்களால் சோடசோபசாரம் முதலிய பூஜைகளை மேற்கொண்டு, வீர சைவன் ஒழுகுதல் இலக்கணமாகும். இதை நம் குல மக்களுக்குப் பயன்படும் வகையில் அம்மந்திரங்களை அச்சு இயற்றிப் புத்தகமாக்கிய இக்குடும்பத்தார்க்கு நன்றி செலுத்துவோமாக.

**A. சித்தையா**
வீரசைவ ஷட்தல பாராயண சபைத் தலைவர்
குகை, சேலம்.

## முகவுரை

வீரசைவச் சிவநேயச் செல்வர்களே! நமது மூல பஞ்சாச்சார்யர்கள் ஒவ்வொரு யுகத்திலும் தர்ம உத்தாரகத்தின் பொருட்டு பஞ்ச லிங்கத்திலிருந்து உற்பவித்து, ஆங்காங்கு தர்ம பீடங்களை அமைத்து, இறைவனுடைய கட்டளையைப் பூர்த்தி செய்து, தான் தோன்றிய லிங்கத்திலேயே மறைந்து, சிவசான்னித்யம் அடைகின்றனர். கலியுகத்தில் ஸ்ரீ ஜகத்குரு ரேணுகாச்சார்யர் ஆந்திரப்ரதேசம் கொல்லிபாகி என்னும் க்ஷேத்திரத்தில் சோமேசலிங்கத்தில் அவதரித்தார்—ஸ்ரீ ஜகத்குரு தாருகாச்சார்யர் வடவிருக்ஷ சித்தேஸ்வர லிங்கத்தில் அவதரித்தார். ஸ்ரீ ஜகத்குரு ஏகோராமராத்யர் திராக்ஷா ராமக்ஷேத்திரத்தில் ராமனாத லிங்கத்தில் அவதரித்தார்—ஸ்ரீ ஜகத்குரு பண்டிதாராத்ரியர் ஆந்திர ப்ரதேசம் ஸ்ரீ சைலம் மல்லிகார்ஜுன லிங்கத்தில் அவதரித்தார்—ஸ்ரீ ஜகத்குரு விஸ்வாராத்யர் ஸ்ரீ காசி விஸ்வநாத லிங்கத்தில் அவதரித்தார். இந்த பஞ்ச ஆச்சார்யர்களும் முறையே — ஸ்ரீ ரேணுகாச்சார்யர் தமது தர்ம பீடத்தை மைசூர் மாநிலம் பாளேஹன்னூரில் ஸ்தாபித்தார் — ஸ்ரீ தாருகாச்சார்யர் தமது தர்மபீடத்தை பெல்லாரி ஜில்லா உஜ்ஜையினியில் ஸ்தாபித்தார் — ஸ்ரீ ஏகோராமராத்யர் தமது தர்ம பீடத்தை ஹிமவத் கேதாரத்தில் ஸ்தாபித்தார் — ஸ்ரீ பண்டிதாராத்யர் தமது தர்ம பீடத்தை ஸ்ரீ சைலத்தில் ஸ்தாபித்தார் — ஸ்ரீ விஸ்வாராத்யர் தமது தர்ம பீடத்தை ஸ்ரீ காசி ஜங்கமவாடியில் ஸ்தாபித்தார். இப்படி பஞ்ச மடங்களின் அதிகாரத்தினால் வீரசைவம் சீரும் சிறப்புடன் நடந்துவந்தன. இங்ஙனம் நடந்துவரும் நாளில், ஆந்திர, கன்னட நாடுகளில் ஜைன, புத்த மதக் கொள்கைகளும் வைதீக ஜாதி வெறிகொண்ட ஆரியக் கொள்கைகளும் பரவின. இந்நிலையில்தான், 12-ம் நூற்றாண்டில், ஸ்ரீ பகவான் பசவேசர் கன்னட நாட்டில் தோன்றினார். அக்காலத்தில் கன்னட நாட்டில் சாளுக்யரும், ஹோய்சாலரும் வலிவு பெற்று ஆக்ஷி செய்துவந்தனர். 12-ம் நூற்றாண்டுப் பிற்பகுதியில் கன்னட நாட்டில், கல்யாணபுரி, சாளுக்ய அரசாங்கத்தின்கீழ் சிற்றரசனாய் இருந்த விச்சலன், ஜைனரின்

ஆதரவு பெற்று, சாளுக்கிய அரச வம்சத்திற்குத் துரோகம் செய்து அரசாங்கத்தைக் கைப்பற்றி சுமார் 10 ஆண்டு காலத்தில் கல்யாணபுரியின் மன்னன் ஆனுன், அக்காலத்தில் அராஜகமும், வைதீக ஜாதி வெறியும் மக்களைக் கதிகலங்கச் செய்தன. இந்த அவல நிலையை, அறிஞர்கள் பலர் உணர்ந்து, நாட்டில் ஏற்பட்ட இன்னல்களை எல்லாம் தீர்க்கவல்ல, அஹிம்சாமூர்த்தி ஒருவரை நல்கி அருளுமாறு, கடவுளை வேண்டினர். கடவுளும் முன்னரே 12-ம் நூற்றுண்டில் தோன்றிய அஹிம்சாமூர்த்தியை நல்கி அருளினுர். அவர்தான் பகவான் ஸ்ரீ பசவேச மூர்த்தி.

## ஸ்ரீ பசவேசர் கால நிலை

12-ம் நூற்றுண்டில், கன்னட நாட்டில் பீஜாப்பூர் ஜில்லா இருங்குளாபுரி என்னும் அக்ரஹாரத்தில் மாதரசன் என்னும் பிராமணுேத்தமருக்கும், மனைவி மாதாம்பிகை அம்மைக்கும் ஆண்மகவாக, பசவேசர் பிறந்தார். பசவருக்கு நாகாம்பிகை என்னும் தமக்கையும் உண்டு. பசவர் இளம் வயதிலேயே கடவுள் பக்தியும் வயதுக்கு மிஞ்சிய துணிவும் உடையவராக விளங்கினுர். பசவர் தாய் மாமன் பலதேவர், விச்சல மன்னனின் முதல் அமைச்சராக இருந்தார். பசவருக்குப் பூணூல் அணியும் தருணம் வந்தது. தாய் தந்தையர், உறவினர், புரோஹிதர், கூடிய சபையோர் முன்னிலையில், பசவர் பூணூல் அணிய மறுத்தார். “கூடலஜங்கமதேவரால் ஏற்கனவே லிங்கதாரணம் செய்யப்பட்டிருக்கிறேன்" என்று கூறி அன்றிலிருந்தே ஜாதி மத பேத உயர்வு, தாழ்வு, நிறைந்த வைதீக தர்மத்தைத் தான் நீக்கிவிட்டதாகவும், சிவ தர்மத்தை ஏற்றுக்கொண்டுவிட்டதாகவும் கூறி, தாய் தந்தையரை விட்டு வெளியேறினுர். பின்னர் அம்மான் பலதேவர், தன் புத்திரியைப் பசவருக்குத் திருமணம் செய்வித்து, இல்வாழ்க்கைத் துணைவி ஆக்கினுர். பின்னர் பசவர் நாஸ்திகத்தை எதிர்த்துப் போராடி வெற்றி கண்டார். ஜாதிமத பேதமின்றி அனைத்து மக்களுக்கும் லிங்க தீக்ஷையும், வீரசைவ ஆசார விசாரங்களையும் புகட்டி, முன்னேற்றி வரும் நாளில், அம்மான்

பலதேவர், சிவபதவி எய்தினார். அரசவையில் முதல் அமைச்சர் பதவி காலியாக இருந்தது. நாட்டு மக்கள் பசவரை முதல் அமைச்சர் ஆக்குமாறு மன்னனுக்கு ஆலோசனை கூறினர். மன்னன் ஒப்புதல் சொல்ல, பசவர் பதவி ஏற்கத் தயங்கினார், இதை அறிந்த மன்னன், பசவரிடம் "உம் விருப்பப்படி அரசியலை நடத்தவும், பொக்கிஷமும், ராணுவமும் உம் தலைமையில் இயங்கவும் ஏற்பாடு செய்கிறேன்" என்று உறுதி கூறியபின், மக்களின் பேராதரவுடன் முதல் அமைச்சர் பதவி ஏற்றார்; ஒரு மதக் கொள்கையைப் பரப்பவும், அதை உன்னத நிலைக்குக் கொண்டு வரவும் பசவர் நல்ல திட்டங்களை வகுத்து, நாட்டு மக்கள் மேம்பாடு அடையச் செய்தார்; வீரசைவம் தழைத்து, ஓங்க வீரசைவ சங்கம் அமைத்து, வீ ர சை ச வ த் தி ன் மூ ல ம் ஒரு மதக் கொள்கையை உறுதிப்படுத்தினார். இதனால் அரசு சார்பிலும், சமுதாயச் சார்பிலும், நாடெங்கும் பசவர் புகழ் ஓங்கியது. இதன்மூலம் நாடெங்கும் சுமார் 1 கோடி மக்கள் வீரசைவத்தைத் தழுவினர்; இதைக் கண்ணுற்ற, வைதீக ஜாதி வெறியர்கள், பொறாமைப்பட்டு விச்சல மன்னனிடம் ரகசியமாக அரசுத்துறையில் பசவரால் தீங்கு ஏற்படலாம்! என சந்தேகத்தை ஏற்படுத்தினர்; மன்னனும், பசவருக்கு நாளுக்கு நாள் பெருகிவரும் செல்வாக்கையும், பலத்தையும் கண்டு, அச்சப்பட்டு, பசவருடைய கீர்த்தியைக் குலைத்து பசவரைச் சிறையில் அடைக்க, எதிர்பார்த்திருந்தான். பசவர்பால் நாட்டு மக்கள் அனைவரும் நம்பிக்கை கொண்டு திடமாய் நின்றதனால், மன்னன் எண்ணம் நிறைவேறவில்லை. சில காலத்துக்குப் பின்பு, பசவருடைய எதிரிகளால் தூண்டப்பட்டு, மன்னன் தன் எதேச்சாதிகாரத்தைக் கொண்டு, பெருமிதமாக வளர்ந்து வந்த வீரசைவ மத ப்ரசாரத்திற்குத் தடை விதித்தான். இதை அறிந்த நாட்டு மக்கள் கொதித்தெழுந்து, பசவருக்குப் பேராதரவு கொடுத்தார்கள். மக்கள் ஆதரவுடன், ஜாதி மத பேதமின்றிய, வீரசைவ மதத்தை நாடெங்கும் சூர்ய ப்ரகாசம்போல் பரவச்செய்த பசவர், தான் எடுத்துக் கொண்ட திட்டப்படி, கலப்பு மணத் திட்டத்தையும் நிறைவேற்ற எண்ணினார். வீரசைவ மதத்தைச் சேர்ந்த பிராமணப் பெண்ணுக்கும்,

வீரசைவ மதத்தைச் சேர்ந்த அரிஜன இளைஞனுக்கும் பெற்றோர் சம்மதப் படி திருமணம் செய்துவைத்தார். இதுவே தக்க தருணம் என வைதீக ஜாதி வெறியர்கள், இது பொருந்தாத் திருமணம் என்று மன்னனுக்கு அறிவிக்க, மன்னன் இது தக்க தருணமென எண்ணி, புதுமண தம்பதி களுக்கு தண்டனை விதித்தான். எத்தகைய தண்டனை தம்பதிகளுக்கு? கால்களில் கயிற்றைக் கட்டி, கற்களிலும், முட்களிலும், நகர்ப்புறத்தே சாகும்வரை இழுக்கப்பட்டனர். கதறினர், பதறினர் உயிர் நீத்தனர். இக்கோரக்காக்ஷி அந்நாட்டில் உள்ள அறிஞர், பொது மக்களின் உள்ளக் கொதிப்பைக்கிளப்பிவிட்டது. "தம்பதிகளுக்குக்கொடுத்த தண்டனையைக் கண்டு மக்கள் அஞ்சுவார்கள். பசவர் கொள்கையை ஆதரிக்க மாட்டார்கள். அவர் உபதேசங்களையும் பின்பற்றமாட்டார்கள்?" என மன்னன் நினைத்ததற்கு மாறாக, கொதிப்படைந்த மக்களால் மன்னன் கொல்லப்பட்டான், இதை அறிந்த பசவர், மனவேதனைப்பட்டார். தன்னைப் பின்பற்றிய மக்களில் பலர் — தான் இதுவரை உபதேசித்து வந்த — அன்பு — அஹிம்சை — சத்யம் — சகிப்புத்தன்மை, மன்னிக்கும் பாங்கு — பெருங்குணம் ஆகியவைகளை உண்மையாகப் பெறவில்லை என்று பசவர் கருதினர். வருந்தினர். பொது மக்களுக்கும் தன் சிஷ்யர்களுக்கும் மேலே குறிப்பிட்ட குணங்களைக் கொடுத்தருளுமாறு தான் வணங்கும் கூடல ஜங்கமேசரிடம் வேண்டினர். இறுதியில் தன்னையும் ஒப்படைத்து, நிரஞ்சன நிஷ்களரானர். பசவர் காலத்தில் வீரசைவம் எழுச்சியும், புகழ்ச்சியும் அடைந்தது. 800 ஆண்டுகளுக்குப்பின், தேசப் பிதா மகாத்மா காந்தி அடிகளும், ஜாதிமத பேதமற்ற சமுதாயம் அமைக்க இந்தியாவிலும் மற்ற மதங்களை அனுஷ்டிக்கும் மேல் நாட்டிலும் அன்பு — அஹிம்சை — சத்யம் — சகிப்பு — மன்னிப்பு — பெரும் குணம் இவைகளைப் போதித்து, உலகில் மஹாத்மாக்கள் அடைந்த நிலையை அடைந்தார் என்பதை அறிவோம். க்ஷுத்ர (சிறிய) கிரியைகள், க்ஷுத்ர தெய்வ வணங்கள், உயிர்பலி யாகங்கள், லிங்கதீக்ஷை இல்லாதவர் புரோஹிதங்கள் ஆகிய இவைகளைத் தவிர்த்து, ஏகலிங்க பூஜையை அடிப்படையாகக்கொண்டு தான் பிறர் — என — துவைதத்தில் தொடங்கி தன்போல் — பிறர் - என - சமரசத்தில் வளர்ந்து தானும் — பிறரும் — உலகும் – ஒன்றே – எல்லாம் சிவமே என — அத்வைதத்தில் முடிகிறது வீரசைவம்.

# தமிழ் நாட்டின் வீர சைவர்கள் நிலை

விஜயநகர ஆக்ஷி வீழ்ச்சிக்குப்பின், முஸ்லீம்கள் ஆக்ஷியின் கொடுமைக்குப் பயந்து, ஆந்திராவிலிருந்து வீர சைவ மக்கள் தமிழ் நாட்டில் குடியேறினர்கள். குடியேறிய மக்கள், பஞ்சமடச் சார்புடைய கிளை மடம் ஸ்தாபித்து, தங்கள் ஆசார விசாரங்களை, விருத்தி செய்து கொள்ளும் சக்தி அற்றவர்களாய், வீர சைவ தர்மங்களை மறந்து, ஆங்காங்கு உள்ள மக்கள் பழக்க வழக்கங்களில் ஈடுபடலாயினர். பின் சுமார் 300 ஆண்டுகளுக்குமுன், சித்தூர் ஜில்லாவிலிருந்து வீரசைவ மடாதிபதி ஒருவர் சேலம் ஜில்லா நாமகிரிப்பேட்டையில் தங்கி இருந்து, வீரசைவ குல மக்களுக்கு லிங்கதீக்ஷையும், ஆசார விசாரங்களையும் போதித்து, நல்வழிப்படுத்தி வந்தார்கள். இப்படி சுமார் 200 ஆண்டுகளுக்குமேலாக, வீரசைவ மக்கள் சமய ஆசாரத்தில் உயர்ந்தவர்களாகவும், தொழில், பொருளாதாரத்துறையிலும் சிறப்போடு விளங்கினர்கள். பின் ஆதீனத்தில் குரு பரம்பரை என்றும், குரு அல்லாத பரம்பரை என்றும் பேதம் ஏற்பட்டு, அதனுல் குரு பீடத்தின் ஆக்ஷி குன்றி, இன்றளவும் ஆதீனம் இல்லாத காரணத்தால், குல மக்கள் வீரசைவ தர்மங்களை மறந்து வாழ்ந்து வருகின்றனர். நிற்க, தமிழ் நாடு பூராவும் — கன்னடம் — தெலுங்கு — தமிழ் — ஆக 3 பாஷையை தாய் பாஷைகளாகக்கொண்ட வீரசைவர்கள் இருக்கின்றனர். இவர்கள் யார் யார் வீரசைவர்கள் ? எங்கு எங்கு வாழ்கின்றனர் ? எனப் புரியாமல் வாழ்ந்து வருகின்றனர். காரணம் தமிழ் நாட்டுக்கென, பஞ்சமட சார்புடைய கிளை மடமோ, உப மடமோ இல்லாததுதான் ; ஆதலால் தமிழ் நாட்டில் வாழும் 3 பாஷைகள் பேசும் வீரசைவர்கள், அனைவரும் ஒன்றுபட்டு, பஞ்சமட சார்புடைய கிளை மடமும், தற்காலம் இயங்கும் மடங்களை உப மடங்களாகவும், மக்கள் அதிகமாக வாழும் இடங்களில் புதிய மடங்களும் ஸ்தாபிப்பது அவசியமும் அவசரமுமாகும். பொதுவாகக் குரு பார்வை இருந்தால் உலகத்துக்கு நன்மை என்பது வழக்கத்தில் உள்ளது. ஆனுல் நமது சமுகத்துக்கு குரு பார்வை இல்லை. பரமேஸ்வரன் மானிடராய் சகளீகரித்து எழுந்தருளி மக்களுக்கு போக

போக்கியங்களை அளித்து, அனித்யமான விஷயங்களில் முழுமையாகப் புத்தி செல்லாவண்ணம் தடுத்து தீக்ஷையாதிகள் செய்து அருள் பாலிக்கிறார். கடவுள் மனித உருவில்தான் அருள் பாலிக்கிறார். ஆதலால் வித்தை — தியாகம் — தபஸ், இவைகள் ஒருங்கே அமைந்த குருவை நாடி, தமிழ் நாட்டில் ஆதீனம் ஏற்படுத்தி, வீரசைவ தர்மத்தை சமய ஆசார விசாரங்களை குரு மூர்த்தமாகப் பெறுவோமாக! இதன்மூலம் பகவான் ஸ்ரீ பசவேசர் அபிலாஷைகளைப் பூர்த்தி செய்தவர்கள் ஆவோம். நிற்க ஆந்திரம், கன்னடம் மற்ற இந்தியப் பகுதியில் உள்ள வீரசைவர்கள், தமிழ் நாட்டு சைவப் பெரியவர்களையும், தொண்டர்களை யும் தமது நூலிலும் வழக்கிலும் போற்றுவர், இதனால் ஆந்திர கன்னட வீரசைவர்களின் பரந்த மனப்பாங்கை காண்கிறோம். சென்னை முதல் இமயம் வரை வீரசைவம் என்றால் புரிகிறது. இதுபோல் தென்னாட்டுசைவப் பெரியவர்கள், தொண்டர்கள், ஆந்திரம், கன்னடம் மற்ற இந்திய பகுதியில் உள்ள வீரசைவப் பெரியவர்களையும் தொண்டர்களையும் தமது நூலிலும் வழக்கிலும் போற்றுதல் அரிது. இதனால் தமிழ் நாட்டு சைவப் பெரியவர்கள், தொண்டர்களின் பரந்த மனப்பாங்கு இன்மையைக் காண்கிறோம். சென்னை முதல் குமரி வரை, வீரசைவம் என்றால் புரியாத நிலையைக் காண்கிறோம். தமிழ் நாட்டில் வாழும் வீரசைவ மக்கள் — தொழில் — பொருள் — உத்தியோகத்துறையில் பின்தங்கியவர்களாக உள்ளதையும் அறிவோம். கிராமம் முதல் நகரம் வரை, ஆங்காங்கு சமூக சங்கமும் இளைஞர் சங்கமும் அமைத்து, அதன்மூலம் ஏற்கனவே பெரியதனக்காரரால், சமூகக்காரியங்களும், **புரோஹிதமும்** நடத்தப் பட்டுவருகிறது. சமூகக் காரியத்தைப் **பெரியதனக்காரருக்கு** ஒப்புவித்து, புரோஹிதத் துறையைத் தனியாக பிரித்து சமூகத்தின்பால் பற்றும் சிவபக்தியும் உடைய நல்லவர்களைத் தேர்ந்தெடுத்து, **புரோஹிதப் பயிற்சி** அளித்து, **புரோஹிதர்களை** நகரம் கிராமம் வரை சமூகத்திற்குப் பொதுவாக்கிக் கொள்ளுவோம். இதனால் சமூகப் பிணக்குகளும், பங்களப் பிணக்குகளும் நீங்கி நாம் அனைவரும் வீரசைவர் என்ற நிலையை அடைவோமாக!

"கூடி இருங்கள் — ஒத்துப் பேசுங்கள் — உங்கள் உள்ளங்கள் ஒரே பாங்கில் ஓர்க — பிரார்த்தனை பொதுவானது ஆக கூட்டத்தின் குறிக்கோள் ஒன்றே ஆகுக — ஒரே தீர்மானம் கொள்ளுங்கள் — உங்களுடைய நோக்கம் ஒன்றே ஆகுக — உங்களுடைய உணர்ச்சி ஒன்றுபடுக — உங்களுடைய அன்பு சேர்ந்திருக்கட்டும் — உங்களுடைய எண்ணம் ஒன்றே ஆகுக — அங்ஙனமே உங்களுடைய ஒற்றுமை நிறைவு எய்துக —" **ரிக்வேதம்.**

இந்தியாவில் சுமார் 1½ கோடி வீரசைவர்கள் இருப்பதாக அறியப்படுகிறது; 1½ கோடி வீரசைவர்களும் தம் இஷ்டலிங்க பூஜையை, தவறாது செய்து முடித்த உடன், உலக மக்கள் புரிந்தும் புரியாமலும், தெரிந்தும் தெரியாமலும், செய்யும் பாவ, புண்யங்களைப் பொறுத்து உலகத்துக்கு க்ஷேமத்தையும், மக்களுக்கு சாந்தியையும் கொடுக்குமாறு, உலக க்ஷேமத்தின் பொருட்டு வீரசைவர்களாகிய நாம், எல்லாம் வல்ல ஸ்ரீ பரமேஸ்வரனை த்ரிகரணசுத்தியுடன் 2 நிமிஷம் தியானிப்போமாக.

இந்நூல் எழுதப் பல நூல்களிலிருந்து மொழிபெயர்த்துக் கொடுத்தவரும், வீரசைவ சாஸ்திரங்களில் நல்ல அனுபவம் உள்ளவரும் ஆன, சிவச் செல்வர் A. சித்தையா அவர்களுக்கும், இதைச் சரி பார்த்துக் கொடுத்த, நாமகிரிப்பேட்டை சிரந்தி S. பழனிசாமி அய்யா அவர்களுக்கும் ராசீபுரம் R. ஆறுமுக அய்யா அவர்களுக்கும் நன்றி. வீர சைவ க்ரந்தங்களிலிருந்து இஷ்டலிங்க பூஜைக்காகவும், சமுதாய க்ரியைகளுக்கும் தொகுத்து வெளியிடப்படும் இந்தப் பிரசுரத்தை, வீர சைவர்கள் தங்களது அனுஷ்டானத்தில் கைக்கொண்டு இகபர இன்பத்தின் பயன் பெற்று ஸ்ரீ கூடல சங்கம தேவரின் திருவருளுக்குப் பாத்திரராகவேண்டுமென வேண்டிக்கொள்கிறேம். வாழ்வு மலரவும் அருள் புரியுமாறு எல்லாம்வல்ல ஸ்ரீ பரமேஸ்வரனை பிரார்த்திப்போமாக.

**ஆத்மகூர் R. A. கமலபதி பண்டாரம் & பிரதர்ஸ்**
**குகை, சேலம்-6.**

# அனுஷ்டான விதி

## ப்ராணாயாமம்

ரேசகம் - பூரகம் - கும்பகம் - என மூவகைச் செயல்பாடு உடையது.
ரேசகம் - உள்ளிருக்கும் வாயுவை வெளியே விடுதல்
பூரகம் - வெளி வாயுவை உள்ளுக்கிழுத்தல்
கும்பகம் - உள்ளுக்கிழுத்த வாயுவை சிறிது நேரம் அடக்குதல்

அவ்வாறு செயல்படும்போது ஒவ்வொன்றுக்கும் 12 மாத்திரை காலம் அளவுள்ளதாக இருக்கவேண்டும். கீழே குறித்துள்ள மந்த்ரத்தை மனதில் உச்சரித்தபடி.

பூரகம் - கும்பகம் - ரேசகம், ஆக 3 முறை சொல்லவும்

## மந்திரம்

ஓம் - பூ: - ஓம்பூவ: - ஓம்சுவ: - ஓம்மஹ: - ஓம்ஜன:
ஓம்தப: - ஓம்சத்ய - ஓம்தத்ஸ விதுர்வ ரேண்யம் பர்க்கோ
தேவன் யதீமஹி: - தியோ யோன: - ப்ரசோ தயாத்
ஓமா - பேஜ்யோதி ரஸோம்ருத. ப்ரஹ்ம பூர் புவஸ்வரோம்

## ப்ராணாயாம முறை

பெருவிரல், நடுவிரல், மோதிரவிரல் இம்மூன்றினுல் நடுவிரல் மூக்கின் மேலும், மற்ற 2 விரல்கள் மூக்கின் 2 துவாரங்களிலும் துவாரங்களை அடைத்து பூரகம் செய்யும்போது இடது துவாரத்தில் சுவாசத்தை மெதுவாக உள்ளுக்கிழுத்து, இழுத்த அளவு அடக்கி, வலது துவாரம் வழியாக அதே அளவு வெளியில் விடுதல், ப்ராணாயாமம் ஆகும்; அதே அளவு ரேசகம், கும்பகம், பூரகம் 3 க்கும் ஷை மந்திரத்தை சொல்லிச் செய்யவும்.

சிவமயம்

# சிவலிங்க பூஜா விதி

வீரசைவன் அதிகாலையில் எழுந்து குருன் துதி - சிவன் துதி முதலியன செய்து காலைக் கடன்களை முடித்து ஸ்நானம் செய்யவும்.

## *ஸ்நான மந்திரம்*

புனம்து மாதேவஜனு: புனம்து மனஸாதிய:
புனம்து விஸ்வாபூதானி ஜாதவேத: புனீஹிமா
என்று ஸ்நானம் செய்து வஸ்த்ர பூதாம்பு சம்பூர்ணம், வஸ்த்ரமா சாத்ய, நிர்மலம் என மடியுடுத்தி
ஜலகும்பம் பரிக்ருஷ்ய: சிவபூஜாக்ரஹ விசேஷத:
என்று பூஜாக்ரஹம் சென்று "ஓம் சர்வக்ஞாய நம:" என்று கையில் உள்ள ஜலத்தைத் தெளித்து ஆசனத்தில் அமரவும்.

## ஆசன மந்திரம்

ப்ருத் வித்வயா த்ருதாலோகா தேவித்வம் விக்ன நாத்ரு தாத்வம்ச பஞ்ச தாயமாம் தேவி பவித்ரம் குரு சாசனம்" என்று கிழக்கு அல்லது வடக்கு முகமாக அமர்ந்து, கலச ஜலத்தில் விபூதியில் ஓம் என்று எழுதி கங்கேச யமுனே சைவ கோதாவரி, ஸரஸ்வதி, நர்மதே சிந்து காவேரி, ஜலேஸ்மின் சன்னிதிம் குரு" என மந்திரித்து பூஜா திரவியங்கள் மேல் தெளித்து

## மந்திரம்

அபசர்பம்து யேபூதா யேபூதா புவிஸம் ஸ்திதா: யேபூதா விக்ன கர்த்தாரஸ்தே நயம்து சிவாஞ்யா" என்று தசதிக்குகளிலும் ஜலம் தெளிக்கவும்.

## சங்கல்பம்



"ஓம் சிவ சிவ சம்போ ராஜ்ஞேய" என்ற சங்கல்பத்தை தேச காலத்தைச் சொல்லி அயனம் பக்ஷம் நக்ஷத்ரம் வாரம் சொல்லி சுபயோக சுபகரண யுக்தாயாம் கோத்ரோத் பன்னே ஹம் — மகமா பாத்த துரித் க்ஷயத்வாரா ஸ்ரீபார்வதி பரமேஸ்வர ப்ரீத்யர்த்தம் இஷ்டலிங்கபூஜா கரிஷ்யே" என்று சொல்லி — ப்ராணாயாமம்

## குருத்யானம்

பஞ்சானன தனுத்பூதான் பஞ்சாக்ஷாமனூயமான்
பஞ்ச சூத்ர க்ருதேவந்தோ பஞ்சாசார்யான் ஜகத்குரூன்

## சிவத்யானம்

சுத்த ஸ்படிக சங்காசம் சுத்த வித்யாப்ரதாயகம்
சுத்தம் பூர்ண சிதானந்தம் சதாசிவ மஹம்பஜே

## விபூதிதாரணம்

விபூதியை (மோதிர விரல், சுண்டு விரல் நீங்கிய) 3 விரல்களினால் எடுத்து இடது கையில் வைத்து ஓம் என்று எழுதி வலது தொடையில் வைத்து வலது கையில் மூடி.

ஓம் அக்னிரிதிபஸ்ம — வாயுரிதிபஸ்ம
ஜலமிதி பஸ்ம — ஸ்தலமிதி பஸ்ம
வ்யோமேதி பஸ்ய — பஸ்ரிமதி பஸ்ம
சர்வாங் ஹவா இதம் பஸ்ம மன இத்யேதானி
சக்ஷூம் ஷி பஸ்மானி "என்று" 11 முறை பஞ்சாக்ஷரம்
சொல்லி ஜபம் செய்து

விபூதி பூஷணம் சைவே — விதிகர்ம விநசனம் யமர்லோக பயம் நாஸ்தி சிவர்லோஹ மஹியதே என்று உத்தூளனம் செய்து ஓம் நம:சிவாய என்று ஜலம் விட்டு மானஸ் தோக:த்ரியாயுஷ : த்ரியம்பகம் என்று குழைத்து

ஓம் ஹ்ரய்யம் — ஈஸானாய நம : என்று சிரசிலும்
ஓம் ஹ்ரௌம்வாம் — தத்புருஷாய நம என்று நெற்றியாலும்
ஓம் ஹ்ரைசிம் — அகோராய நம : என்று மார்பிலும்
ஓம் ஹ்ரொம்மம் — வாமதேவாய நம : என்று வயிற்றிலும்
ஓம் ஹ்ரீம் நம் — சத்யோஜாதாய நம : என்று முழங்காலிலும்
ஓம் ஹ்ராம் ஓம் — சதாசிவாய நம : என்று சர்வாங்கத்திலும்

அணியவும்

## உருத்திராக்ஷ தாரணம்

ருத்ராக்ஷ வ்ருக்ஷ பீஜாய பூதிஸம்பூதிஹேதவே
நேத்ரத்ரயாய ருத்ராய நமோலோக ஹிதார்த்தனே

## இஷ்டலிங்கபூஜை தியானம்

யாதேருத்ர சிவாதனூ : சிவா விஸ்வரஹ பேஷஜி
சிவா ருத்ரஸ்ய பேஷஜி தாயாஞேம்குட ஜீவஸே

எனக் துதித்து

ஓம் சிவாய நம :— ஓம்ருத்ராய நம :— ஓம் பசுபதயே நம :
ஓம் நீலகாண்டாய நம:— ஓம் விருபாக்ஷாய நம :— ஓபிஞகினே நம:
ஓம் த்ரிபுராந்தகாய நம :— ஓம் சம்பவே நம :—
ஓம் சூலினே நம :— ஓம் மஹாதேவாய நம :—

என்று செஜ்ஜைகயின்மேல் புஷ்பம் இட்டு, லிங்கத்தை எடுத்து
கையில் வைத்து

அயம்மே, ஹஸ்தோ பகவான் — அயம்மே பகவத்தர :
அயம்மே விஸ்வபேஷ ஜோயம் — சிவாபி மாசன :
அயம் மாதா அயம் பிதா அயம் ஜீவாது-ராகமாத், இதம்தவ
ப்ரசர்பணம் ஸுபந்த வேஹி நிரீஹி — என்று துதித்து

அபிஷேகம் செய்யவும்

1. தைலம் 2. பால் 3. தயிர் 4. நெய் 5. தேன் 6. சர்க்கரை 7. பஞ்சாமிர்தம் 8. எலுமிச்சை 9. பேரிச்சை 10. கரும்பு 11. இளநீர் 12. திருமஞ்சனம் 13. விபூதி 14. சந்தனம் 15 பில்வம் 16. சொர்ணம் 17. அன்னம் 18. ருத்ரம்.

## ருத்ராபிஷேகம்

நம : சோமாவச—ருத்ராயச, நம : ஸ்தாம்ராயச. அருணாயச — நம : சங்காயச — பசுபதயேச, வம : உக்ரரயச பீமாயச, நம : அக்ரேவதாயச தூரேவதாயச, — நமோ அந்தரேச, ஹனீயசேச, நமோ வ்ருக்ஷப்யோ ஹரிகேசேப்யோ, நம : ஸ்தாராய ச, நம : ஸம்பவே ச, மயோபவே ச, நம : ஸங்கராய ச, மயஸ்கராய ச, நம : சிவாய ச சிவதராய ச, நம : தீர்ததாய ச, கூல்யாய ச, நம : பார்யாய ச. அவார்யாயச, நம : ப்ரதர்ணய ச, உத்தர்ணய ச, நம : ஆதார்யாய ச, ஆலாத்யாய ச, நம : சிகத்யாயச — ப்ரவாஹ்யாயச, ஓம் ஹ்ரீம் ஓம் ஸாந்தி — ஸாந்தி — ஸாந்தி என்று அபிஷேகம் செய்து பின் லிங்க வஸ்திரத்தில் ஈரம் போக்கி.

## வஸ்திரம் அணிதல்

மாயாசித்ர படச்சன்னே நிஜகுஹ்யோருதேஜஸே
நிராவரண விஜ்ஞான வஸ்திரம்தே கல்பயாம் யஹம்

ஸ்ரீ சாம்ப சதாசிவாய வஸ்திரம் சமர்ப்யாமி

## விபூதி

அனாதி சாஸ்வதம் ஸாந்தம் — சைதன்யம் சித்ஸ்வரூபகம்
சிதம்கம் வ்ருஷபகாரம் — சித்பஸ்மலிங்கதாரணம்

ஸ்ரீ சாம்ப சதாசிவாய நம: பஸ்மம் தாரயாமி

### சந்தனம்

பாமானந்த சௌரப்யம் - பரிபூர்ணதிகம்தரம்
க்ருஹாண பரமம் கம்தம் க்ருபையா பரமேஸ்வர

ஸ்ரீ சாம்ப சதாசிவாய நம: கந்தம் தாரயாமி

### அக்ஷதை

அக்ஷதான் தவளன் திவ்யாம் - ஸ்திலதம்டுலமின்ரிதான்
அர்ப்யாமி மஹா பக்த்யா - ப்ரசீத பரமேஸ்வர

ஸ்ரீ சாம்ப சதாசிவாய: அக்ஷதான் சமர்ப்யாமி

### பில்வம்

த்ரிதளம் த்ரிகுணாகாரம் த்ரிநேத்ரம்ச, த்ரியாயுதம்
த்ரி ஜன்ம பாபசம்ஹாரம், ஏக பில்வம் சிவார்ப்பணம்

### புஷ்பம்

ஸேவந்தி காபகுல — சம்பகபாடிலாம் ஜை
புன்னாக ஜாஜிகரவீர — ரஸால புஷ்பை:
ப்ல்வப்ரவால — ஸுஸமீதல மல்லிகாபி
ஸ்த்வாம் பூஜயாமி ஜகதீஸ்வா மேப்ரஸீத

ஸ்ரீ சாம்ப சதாசிவாய நம: நாநாவிதபத்ர புஷ்பம் சமர்ப்பயாமி

### தூபம்

வனஸ்பதி ரஸோபேதோ, கம்தாட்யோ கம்தமுத்தம:
ஆக்ரேய சர்வதேவானும் — தூபோயம் ப்ரதி க்ருஹ்யதாம்

ஸ்ரீ சாம்ப சதாசிவாய நம: தூபமாக்ராபயாமி

### தீபம்

ஸ்வப்ரகாச மஹாதேவா — ஸர்வாம்தஸ்தி மிராபஹ
ஸபாஹ்யாப்யம் தரம்ஜோதிர் — தீபோயம் ப்ரதிக்ருஹ்யதாம்

ஸ்ரீ சாம்ப சதாசிவாய நம: தீபம் தர்சயாமி

## நைவேத்யம்

நைவேத்யம் ஷட்ரஸோபேதம் — நாநா பக்ஷ்யசமன்விதம்
ததி க்ஷீரக்ருதோபேதம் நைவேத்யம் ப்ரதிக்ருஹ்யதாம்

ஸ்ரீ சாம்ப சதாசிவாய நம: நைவேத்யம் சமர்ப்பயாமி

அனந்தரம்பானியம் சமர்ப்பயாமி — ப்ரக்ஷாளனம் சமர்ப்பயாமி
சுத்தோதகம் சமர்ப்பயாமி —" என்று நைவேத்யம் செய்து
த்ராக்ஷாகர்ஜிச சம்யுக்தம். நாரிகேளபலாம்ருதம்
மது சர்க்கரை யாயுக்தம் நைவேத்யம் சப்ரகல்பயேத்
நைவேத்யம் சமர்ப்பயாமி

## தாபூலம்

புகீபல சமாயுக்தம் நாகவல்லி தளைர்யுதம்
கர்பூர சூர்ணம் சம்யுக்தம் தாம்பூலம் ப்சதிக்ருஹ்யதாம்

ஸ்ரீ சாம்ப சதாசிவாய நம: தாம்பூலம் சமர்ப்பயாமி
தாம்பூலம் கே பானீயம் சமர்ப்யாமி
என அர்ப்பணம் செய்யயும்.

## தக்ஷிணை

இரண்ய கர்ப் கர்பஸ்தம் ஹேம பீஜம் விபாவஸோ
அனந்த புண்ய பலதம் ப்ரயச்சாமி மஹேஸ்வர

ஸ்ரீ சாம்ப சதாசிவாய நம: தக்ஷிணும் சமர்ப்யாமி

## கர்பூரம்

கர்பூர நிர்மிதம் தீபம், ஸவர்ணபாத்ரே நிவேஸிதம்
நீராஜிதம் மயா பக்த்யா க்ருஹாண பரமேஸ்வர

ஸ்ரீ சாம்ப சதாசிவாய நம: கர்ப்பூர நீராஞ் ஜன்ம்தர்சயாமி

## கண்டா நாதம்

ஆகமார் தம்து தேவனும் கமனுர் தம்து ரக்ஷமாம்
குர்வே கண்டாரவம் பக்த்யா ஸர்வோபத்ரவ நாசனம்

ஸ்ரீ சாம்ப சதாசிவாய நம: கண்டா நாதம் க்ரஹீத்வா

## புஷ்பாஞ்சலி

யஜ்ஞேன யஜ்ஞமய ஜந்ததேவா : தானிதர்மானி
பர்தமான் யாசன தேஹநாகம் மஹிமான :
ஸசம்த யத்ரபூர்வே ஸாத்யா : ஸம்திதேவா :

ஸ்ரீ சாம்ப சதாசிவாய நம: புஷ்பாஞ்ஜலிம் சமர்ப்பயாமி

## ப்ரதக்ஷணம்

ப்ரக்ருஷ்ட பாபநாசாய ப்ரக்ருஷ்ட பலசித்தயே
ப்ரதக்ஷணம் கரோமி ஸப்ரசீத பரமேஸ்வா

ஸ்ரீ சாம்ப சதாசிவாய நம: ப்ரதக்ஷணம் கரோமி

என்று 3 தடவை சுற்றி, புஷ்பத்தை சிரஸில் தரிக்கவும

## நமஸ்காரம்

நம : சிவாய ஸாந்தாய நம : ஸோமாய ஸம்பவே
நம : சிவாய கல்யாணி பதயே தே நமோ நம :

ஸ்ரீ சாம்ப சதாசிவாய நம : நமஸ்காரம் கரோமி

நமோ ஹிரண்ய பாஹவே ஹிரண்யவர்ணய
ஹிரணப ருபாய, ஹிரண்யபதயே, அம்பிகாபதயே,
பசுபதயே நமோ நம :

என்று கைகூப்பி நமஸ்காரம் செய்து

## ஸ்தோத்ரம்

ஹரசம்போ மஹாதேவ விருபாக்ஷ த்ரிலோசன
தயா ஸிம்தோ தீனபந்தோ ரக்ஷ ரக்ஷ மஹேஸ்வர
மாயா ஸமுத்ரபதிதம் அனந்தகலூஷாயனம்
மாமுத்ருத்ய மஹேஸான பக்தவத்ஸல ஸம்கர

என்று தோத்திரம் செய்து அர்ச்சனை.

பவாய தேவாய நம: ஸர்வாய தேவாய நம:
ஈஸானுய தேவாய நம: பசுபதயே தேவாய நம:
ருத்ராய தேவாய நம: உக்ராய தேவாய நம:
பீமாய தேவாய நம: மஹாதே தேவாய நம:

என்று அர்ச்சனை செய்து தர்ப்பணம்.

பவம் தேவம் தர்ப்பயாமி ஸர்வம் தேவம் தர்ப்பயாமி
ஈஸானம் தேவம் தர்ப்பயாமி பசுபதிர்தேவம் தர்ப்பயாமி
ருத்ரம் தேவம் தர்ப்பயாமி உக்ரம்தேவம் தர்ப்பயாமி
பீமம் தேவம் தர்ப்பயாமி மஹாம்தம்தேவம் தர்ப்பயாமி

என்று மந்த்ர சகிதம் புஷ்பாஞ்சலி செய்து துதி செய்து நவ வித பக்தியை சமர்ப்பிக்கவும்.

## ப்ரஸாத புஷ்பதாரணம்

"யோ ப்ரஹ்மாணம் விததாதி பூர்வம்
யோ வை வேதாம்ஸ்ச ப்ரஹிணோதி தஸ்மை
தம் ஹதேவ ஆத்மபுத்தி ப்ரகாசம்
முமுக்ஷுர்வை சரணம அஹம் ப்ரபத்யே"

என்று புஷ்பத்தை சிகையில் தரிக்கவும்.

பின்னர்

மந்த்ர தந்த்ர பூஜா உபகரணங்கள் முதலியவற்றில் வழு, குறை பாடுகள் நீங்க, ப்ராயசித்தம் செய்தற் பொருட்டு 108 தரம் பஞ்சாக்ஷரம் ஜபம் செய்யவும்.

பின்னர்

மந்த்ரலோபம் தந்த்ரலோப பக்தி ஸாந்தா லோப வித் அபராத ப்ராய சித்தார்த்தம் மூலம் மந்த்ரம் ஜபம் கரிஷ்யே.

## பூஜாக்ஷமாபனம்

யோருத்ரோ, அக்னௌயோ, அப்ஸு ய, ஓஷதீஷு
யோருத்ரோ விஸ்வாபுவனு, ஆவிவேச தஸ்மை
ருத்ராய நமோ அஸ்து
யேதே ஸகஸ்ர மயுதம் பாசாம்ருத்யோ மர்த்யாய ஹந்தவே
தான்யஜ்ஞஸ்ய மாயயா ஸர்வா-னவயஜாமஹே
ம்ருத்யவே ஸ்வாஹா ம்ருதயவே ஸ்வாஹா
ஓம் நமோ பகவதே ருத்ராய விஷ்ணவேம்ருத்யுர்மேபாஹி
ப்ராணனும் க்ரந்திரஸிரத்ரோ மாவிசாந்தக :
அங்குஷ்ட, மாத்ராஹாபுருஷோம் குஷ்ட்ம்ச ஸமாஸ்ரித :
ஈஸஸ், ஸர்வஸ்ய, ஜகதப்ரபு : ப்ரிணுதிவிஸ்வபுக்
இதி மந்திரக்ருத பூஜநானேன ஸ்ரீமத் இஷ்டலிங்க,
ப்ராணலிங்க, பாவலிங்காத்மா, ஸ்ரீ சாம்பசதா சிவாய ப்ரீயதாம்
ஓம் ஸாந்தி, ஸாந்தி, ஸாந்தி :

ஸ்ரீ

உ

சிவமயம்

# புண்ய ஆவாகனம்

குறிப்பிட்ட இடத்தில் மெழுகிக் கோலமிட்டு, வாழை இலை போட்டு, அதில் அரிசியைப் பரப்பி, மஞ்சள் பிள்ளையார் வைத்து தீபம் ஏற்றி வைத்து

ஓம் ய : சிவோ நாம ரூபாப்யாம் யா : தேவி
சர்வ மங்களா தயாஸ் சாணுத் பும்ஸாம்
சர்வதோ ஜயமங்களம் சுப முகூர்த்தமஸ்து சுப்ரதிஷ்தமஸ்து

ஹர ஓம் ததேவ லக்னம் சுதினம் ததேவ தாராபலம், சந்த்ரபலம், ததேவ வித்யாபலம் தைவபலம், ததேவ கௌரிபதே தேம்க்ரியுகஸ் மராமி.

ஓம் ருக்வேதாய ஸ்வா :, யஜுர்வேதாய ஸ்வா :
சாமவேதாய ஸ்வா : அதர்வண வேதாய நம :
இதிகாச புராணுய நம : அனந்ராய நம :
சூக்ஷமாய நம :, சிவோத்தமாய நம : ஏகநேத்ராய நம :
த்ரீமூர்த்தயே நம :, சிகண்டினே நம : ஸ்ரீகண்டாய நம :
ஹ்ருதயாய நம :, சிரஸே நம :, சிகாயை நம :
கவசாய நம :, நேத்ரத்ரயாய நம : அஸ்திராய நம ;

என்ற வாசகங்களால் நமஸ்கரித்து, ஆசமனம் செய்து நீரினுல் ஞானேந்திரியங்களைத் தொட்டு ப்ராணுயாமங்களைச் செய்து மனதை ஒருமுகபடுத்தி

## சங்கல்பம்

ஓம் ஸிவ, ஸிவ, சம்போராக்ஞா, ப்ரவர்த்தமானஸ்ய ஆத்ய ப்ராமண ; த்வீதிய பரார்த்தே, ஸ்வேதவராக கல்பே. வைவஸ்வதமன்

வந்த்ரே, கலியுகே ப்ரதமபாதே, ஜம்புத்வீபே, பாரதவர்ஷே, பத கண்டே, மேரோர் தக்ஷிணபாகே, தண்டகாரண்யே, கோதாவர்யா: தக்ஷிண கொலே, ஸ்ரீ சைலஸ்ய, ஆக்னேயப்ரதேஸே, க்ருஷ்ணா காவேர் யோ: மத்யப்ரதேஸே, சாலியவாகனசகே, பௌத்தாவதாரே, ஸ்ரீ சுகவனேஸ்வர சிவக்ஷேத்ரே, சாந்த்ர சௌரமானேன, ப்ரபாவாதி ஸஷ்டி ஸம்வத்ஸராணும் மத்யே, காளயுக்தி நாம ஸம்வத்ஸரே, உத்த ராயணே, ருதவ், மாசே பக்ஷே, திதௌ, வாசரே நக்ஷத்ரே, சுபயோக சுபகரண யுக்தாயாம், அஸ்யாம் சுபபுண்யகாலே, ருக் - யஜுர் - சாம - அதர்வண வேதஸாகானும் - கண்டாகர்ண - கஜகர்ண தாருக - ரேணுக - விஸ்வகர்ண குரு கோத்ராணும் - வீரசைவதந்த்ர - வீரமஹேஸ்வரதந்த்ர - காரணதந்த்ர - சாரணதந்த்ர சூத்ராணும் - ஏகோராம - பண்டிதாராத்ய - ரேவணசித்த - மருளசித்த - விஸ்வாராத்ய ச கௌர ப்ரவராணனும் - ஹிமவத் ஸேதுபரியந்தம் - பக்த மஹேஸ்வரா ணும் - அஸ்மாஹம் சஹ குடும்பானும் க்ஷேமஸ்தைஸ்வரிய - வீரிய - விஜய - ஆயுர் - ஆரோக்யாபி வ்ருத்யர்த்தம், தன கனக, வஸ்து வாஹன- புத்ர பௌத்ராபி வ்ருத்யர்த்தம் - தர்மார்த்த - காமமோக்ஷாதி - சதுர்வித பல புருஷார்த்த சித்யர்த்தம் — இஷ்டகாம்யார்த்த சித்யர்த்தம்மமோ பாத்த - துரித க்ஷயத்துவாரா - ஸாந்த்யர்த்தம் ஸ்ரீ பார்வதி பரமேஸ்வர ப்ரீத்யார்த்தம் - என்று சங்கல்பம் செய்து கீழ்கண்ட 5 காரியங்களுக்கும் விவரம் குறித்துள்ளது. எந்த காரியத்திற்குப் புண்யாவாகனம் செய்ய வேண்டுமோ அந்தப் பெயரைச் சொல்லவும்.

1. விவாஹம் : விவாஹ மஹோத்ஸவ த்விதீதாய ஸ்வஸ்தி புண்யாவாகன, சங்கல்பேண சமர்ப்பிதம்ததா.

2. க்ரஹப்ரவேசம் : நூதன க்ரஹப்ரவேச ஸ்வஸ்தி, புண்யார்ஜன சங்கல்பேண சமர்ப்பிதம்ததா.

3. மகப்பேறு : கர்ப்பகோள் நிவாரணதிஸ்வஸ்தி புண்யாவாகன சங்கல்பேண சமர்ப்பிதம்ததா.

4. ருது ஸ்நானம் : ருது கால கர்ப்பமோசன நிவாரணார்த்தி ஸ்வஸ்தி புண்யாவாகன சங்கல்பேண சமர்ப்பிதம்ததா.

5. அந்தியஷ்டி : சிவலிங்கைக்யார்த்த, மோக்ஷ தீபாராதன ஸ்வஸ்தி புண்யாவாகன சமர்ப்பிதம்ததா.

## ஸ்ரீ கணபதி பூஜை ஆவாஹனம்

கணானாம்த்வா, கணபதிக்கும் ஹவாமஹே
கவீம் கவீனாம் உபமஸ்த்ர வத்ஸமம்
ஜேஷ்டராஜம் ப்ரஹ்மணாம், ப்ராஹ்மணஸ்பத ஆன :
ஸ்ருண் வன்னோதி பி : ஸீதசாதனம்
ஓம் மஹாகணபதயே நம : ஆவாஹயாமி, ஆசனம் சமர்ப்யாமி

சுக்லாம் பரதரம் விஷ்ணும் சஸிவர்ணம் சதுர்பபுஜம், ப்ரசன்ன வதனம், த்யாயே, சர்வ விக்னோப ஸாந்தயே", அவகஜானன பத்மார்க்கம் கஜானன மஹர்நிசம் அனேகதந்தம் பக்தானாம் ஏக தந்தம் உபாஸ்மஹே".

சுமுகோ ஏக தந்தச்ச, கபிலோ கஜகர்ணக :
லம்போதரச்ச, விகடோ, விக்னராஜோ, கணாபதிப :
தூமகேது கணாத்யக்ஷோ பாலசந்த்ரோ கஜானன :
வக்ரதுண்டோ சூர்ப்பகர்ணோ, ஹேரம்பஸ்க் கந்தபூர்வஜ :
அஷ்டா வஷ்டௌச்ச நாமானி ய : படேத
ஸ்ருணுயாதபி, அவிக்னம்குரு மாதேவ சர்வ
கார்யேஷு சர்வதா, ஓம் மஹா கணபதயே நம :

கந்தம் தாரயாமி, அக்ஷதான் சமர்ப்யாமி, புஷ்பம் சமர்ப்பயாமி, தூபம் ஆக்ராபயாமி, தீபம்தர்ஸயாமி, நைவேத்யம் சமர்ப்பயாமி, தக்ஷிணை தாம்பூலம் சமர்ப்யாமி, கர்ப்பூர நீராஞ்சனம் சமர்ப்பயாமி,

சோட சோபசார '(பூஜாம் கிரிஷ்யே, என்று வினயக பூஜையைச் செய்து, கலஸ பூஜையைத் துவக்கவும்.

## கலஸ ஆவாஹனம்

தத்வாயாமி, சுனஸ்சேஷோ, வருணத்ருஷ்டுப்
உத்தரகலனே வருணுவாஹனே வினியோக :
தத்வாயாமி ப்ராஹ்மணு வந்த மானஸ்ததா
ஸாஸ்தே எஜமானே ஹவிர்பிஹி அஹேடமானே
வருணே : போத்திரு சகுங் சமானுயுஹு ப்ரமோஷி
ஓம் பூ : வருணம் ஆவாஹயாமி
ஓம் புவ : வருணம் ஆவாஹயாமி
ஓம் சுவ : வருணம் ஆவாஹயாமி
ஓம் பூர்புவஸ்ஸுவ : வருணம் ஆவாஹயாமி,

என ஆவாஹனம் செய்து கலஸத்தைத் தொட்டு கொண்டு

## மந்த்ரம்

கலஸஸ்ய முகேருத்ரஹ, கண்டே விஷ்ணு சமாஸ்ரித :, முலேதத்ர ஸ்திதோ ப்ரம்மா, மத்யே மாத்ரு கணுஸ்ருதா :, குக்ஷௌது சாகரா சர்வே சப்த்தீவீபா, வசுந்தரா, ருக்வேத, யஜுர்வேதஸ், சாமவேதோ, யதர்வண :, அம்கைஸ்ச, சகிதாசர்வே கலஸாம்பு, ஸமாஸ்ரிதா :

கங்கேச, யமுனே, சைவ, கோதாவரி, ஸரஸ்வதி, நர்மதே சிந்து, காவேரி ஜலேஸ்மின் ஸன்னிதிம் குரு எனச்சொல்லி, கந்தம் அட்சதை களால் பூஜை செய்து காயத்ரி மந்திரத்தினுல் தீர்தத்தைப் புரோக்ஷித்து சோடசோபசாரங்களைக் கூறி பூஜித்து அநயா, பூஜையா, வருணுதி தேவதா, சுப்ரீதா சுப்ர ஸன்னு, வரதாபவந்து என தீர்த்தத்தைப் புரோக்ஷித்து.

## கலஸ பூஜை

உமா மஹேஸ்வராப்யாம் நம : - ப்ரமதகணேப்யோன் நம : பக்த மஹேஸ்வரோப்யோன் நம : - துர்க்கா கணபதி க்ஷேத்ர பாலகேப் யோன் நம : - மாத்ருப்யோன் நம : பித்ருப்யோன் நம : - ஆச்சார்யேப்

யோன் நம : இஷ்ட தேவதாப்யோ நம : - ஸர்வேப்யோ மஹேஸ்வரேப் யோன் நம : - என்று கர்ப்பூர ஆரத்தி நீராஞ்சனம் செய்து, எல்லோருக் கும் தீபாராதனை கொடுத்து சந்தன தாம்பூலம் கொடுக்கவும்.

பின்

கலஸ தீர்த்தத்தைக் குடும்பத் தலைவர் முதல் ஒவ்வொருவராக வரச் சொல்லி, கலஸ தீர்த்தத்தைச் சிரஸில் புரோக்ஷித்து ஆசீர்வதிக்கவும்.

ஆசீர்வாதம்

ஸ்ரீயம், வர்த்தஸ்ய, மாயுஸ்ய, மாயுதாஸ் சோபாயமானம் - மஹிதே தன தான்ய - பசுபுத்ர லாபம் சதசம் வத்ஸர தீர்க்கமாயுஹு என ஆசீர்வதித்து பின் கலஸ தீர்த்தத்தை வீட்டின் எல்லாப் பாகங்களி லும் தெளித்துச் சுத்தி செய்யவும்.

## விஸர்ஜன மந்த்ரம்

யஜ்ஞேன யஜ்ஞ தேவா :

கச்ச - கச்ச - சுரஸ்ரேஷ்டா - ஸ்வஸ்தானம்

பரமேஸ்வர - யத்ர ப்ர்ம்மாத யோ - தேவா

ஸ்தத்ர கச்ச, கணுதிப

ஸ்தத்ர - கச்ச - பஞ்சப்ரம்மா.



உ
சிவமயம்

# திருமண விதி

திருமண காலத்தில் சங்கல்பம் - கணபதி பூஜை - செய்து கலஸ ஸ்தாபனம் செய்து பூஜித்து - பாலகம்பம் நடுதல் ஆண் பெண் இருவருக்கும் கங்கணதாரணம் செய்தல்.

## கங்கணதாரண மந்த்ரம்

காஷ்மீர வஸதேகன்யா - லங்காயாம் வஸதேவரஹ
அகடோ விகடச்சைவ - பர்புரத்வா ஜகங்கண :

இதி மந்த்ரேண கங்கணதாரணம் கரோமி - பின் இருவருக்கும் நலுங்கு வைத்து எழுப்பவும் அரச இலை கொண்டுவந்து பாலகம்பத்தில் கட்டுதல் அரசாணி தயார் செய்தல் - மணவரை தயார் செய்தல் - தம்பதிகள் ஸ்நானம் செய்து கிணற்றடியிலிருந்து பூரண கும்பங்களை பூஜை செய்து பத்யங்கள் சொல்லி அழைத்து வந்து பாலகம்பத்திற்கு மேற்கு பக்கமாக வீரபத்ர கலசம் ஸ்தாபித்து வாழை இலை போட்டு அரிசியை பரப்பி 3 பாகமாக பிரித்து 1 பாகத்தில் ஸ்ரீ பார்வதி தேவியும் 1 பாகத்தில் ஸ்ரீ லக்ஷிமி தேவியும் - 1 பாகத்தில் ஸ்ரீ சனி தேவியும், ஆவாஹனம் செய்து வீரபத்ர பள்ளயம் போட்டு 5 மஹேஸ் வரர்களை இஷ்டலிங்க பூஜையை செய்துகொள்ள செய்து சகலருக்கும் ப்ரஸாதம் வழங்கி மாங்கல்யதாரண சடங்குகள் துவங்கவும் - இரண்டு தட்டில் சேஷ, பச்சரிசியை எடுத்து தேங்காய், பழம், புஷ்பம், பூஜைக் குரிய பொருள்கள் உடன், பிள்ளையார் கோவிலுக்கு மாப்பிள்ளையை அழைத்துபோய் வணங்கிவரவும்.

பின்னர்

ஒரு தட்டில் அரிசி தேங்காய், பழம், தாம்பூல புஷ்பங்களுடன் மாங்கல்யம் சுற்றிய தேங்காயை தட்டில் வைத்து - மாப்பிள்ளையையும், பெண்ணையும் தனி தனியாக பூஜை செய்விக்கவும்.

## மந்த்ரம்

1) ஸ்ரீ பார்வதி நமஸ்துப்யம், ஸ்ரீ கண்டப்ரிய பாமினி
விவாஹ பாக்ய மாரோக்யம் - சத்புத்ர லாபம்ச தேஹிமே

2) ஸ்ரீ மஹாலக்ஷ்மி நமஸ்துப்யம் கேஸவப்ரிய வல்லபே
விவாஹ பாக்ய மாரோகயம் - சத்புத்ர லாம்ச தேஹிமே

3) ஸ்ரீ சஸிதேவி நமஸ்துப்யம் வாஸவ ப்ரியகாமினி
விவாஹ பாக்ய மாரோக்யம் ஸத்புத்ரலாபம்ச தேஹிமே
ஸ்ரீ பார்வதி, மஹாலக்ஷ்மி, சஸியோப்யோன் நம :

த்யாயாமி, த்யானம் சமர்ப்யாமி, என்று சோடசோப சாரங்களால் பூஜை செய்து மணமக்களை வணங்க செய்து

## மாங்கல்ய ஆசீர்வாத மந்த்ரம்

த்ரிவிஞ்ஞேதா த்ரிவிஞ்ஞே ஸஸ்து ரஸ்யா
த்ரிவிஞ்ஞேதா சராரஸ்ய பிரியம் ஸது
த்ரிவிஞ்ஞேதா வீரவாது மிஷண்ஞே
த்ரிவிஞ்ஞேதா தாராஸதே தீர்க்கமாயு :

## மாங்கல்யதாரண மந்த்ரம்

சர்வமங்கள : - மாங்கல்யஸிவே - ஸர்வார்த்தஸாதக
ஸரண்யே - த்ரயம்பகாதேவி - நாருயணீ - நமோஸ்துதே
மாங்கல்யம் தந்துநானேன - மமஜிவன, ஹேதுனு
கண்டபத்னுமி சுபகத்வம் ஜீவஸரதஜ ஸதம்
யதாபத்நம், தாக்ஷாயணி, ஹிரண்யம் ஸுதேவேஸு
சுதாநேஸு - க்ருனுத தீர்க்கமாயு : இதி மந்த்ரேண
மாங்கல்யதாரணம் கரோமி : சுபமஸ்து.

## கன்னிகாதானம்

கன்யாம் கனக சம்பன்னும் ஸர்வாபரண பூஷிதாம்
தாஷ்யாமி ஸம்பவே துகயம் - சிவலோக ஜிகீர்ஷயே
தேவபக்தர் கணேர்மத்யே, ஆஸேஷ ஜனசம்மதம்
ஸ்வபுத்ரீம் யதேதத்தம் தாராதத்தஸ்து நிஸ்ச்சயம்
மமவாம பார்ஸவதிஷ்டதாம் - அனகதாயி, வராயி
ஸ்வர்ண பூர்வக, சகும்ஸள, பில்வதள சாக்ஷேண
கன்யாதானம் கரிஷ்யே

மாங்கல்யதாரணத்திற்குபின் அரசாணி முதலியவைகளையும் சபையையும் வணங்கி உட்காரவேண்டும் மணமக்களுக்கு அக்ஷதை ஆசீர்வாதம் செய்து தேசங்களுக்கு தாம்பூலமும் புரோஹிதர் பிரதமதஸ்தர்களுக்கும் தாம்பூலம் கொடுத்து பந்துக்களுக்கு தாம்பூலம் வழங்கவும்.

## கங்கண விஸர்ஜனம்

காஷ்மீர வஸதே கன்யா லங்காயாம் வஸதேவர :
அகடோ விகடச்சைவ, பர்பரத்வாஜ கங்கண :
இதிமந்த்ரேண கங்கண விஸர்ஜனம் கரோமி.

## ஆசீர்வாதம்

ஸ்ரீயாம் வர்த்தஸ்ய மாயுஸ்ய ஆரோக்ய மாயுதாச்
சோபமானம் மஹிதே தனதான்ய சுப புத்ரலாபம்
ஸத ஸம்வத்ஸர தீர்க்கமாயு : சம்பூர்ணம்

## விஸர்ஜனம்

யஜ்ஞேன யஜ்ஞதேவா கச்ச, கச்ச, சுரஸ்ரேஷ்டா
ஸ்வஸ்தானம் பரமேஸ்வர யத்ர ப்ரமாதயோ தேவா
ஸ்தத்ர கச்ச கணதிப ஸ்தத்ரகச்ச பஞ்ச ப்ரம்மா
ஸ்தத்ர கச்ச வீரபத்ரா சுபமஸ்து

சிவமயம்

# நூதன க்ரஹப்ரவேசம்

புதுமனை புகும் நன்நாளில் தம் நித்ய கர்மானுஷ்டானங்களை முடித்து கொண்டு புது வஸ்திரங்களை தரித்து சுத்த ஜலம் நிறைந்த கலஸத்தை கையில் எடுத்துக்கொண்டு பூஜைக்கு உரிய மாவிலை, தர்பை, அருகு, தேங்காய் பழம் தாம்பூலங்களுடன் தட்டில் வைத்து பெரியவர்கள் பந்துக்கள் சுமங்கலிகளுடன் குரித்த காலத்தில் கன்று உள்ள பசுவை அலங்கரித்து - அரிசி - எள்ளு - வெல்லம் - நெய் - தேன் - உளுந்து பயறு - உப்பு - சுண்ணும்பு - பூசனி - தேங்காய் - பழம் - பூஜைக்குரிய சாமான்களுடன் வாசக்காலுக்கு வரவும். அங்கு மஞ்சள் வஸ்திரத்தில் திரையிட்டு அலங்கரித்து வைத்துள்ள, வாசக்காலின் மத்தியில் இருந்து கொண்டு ஓம் என்று விபூதியில் எழுதி இருபக்கமும் ஸ்ரீ என்று எழுதி அதன்மேல் பத்ரபுஷ்பங்களை வைத்து ஸ்ரீ கணபதியை தியானித்து - வாஸ்தோஷ்பதிம் - ஆவா ஹயாமி என பூஜித்து தேசம் காலம்கள் சொல்லி - சங்கல்பம் செய்து - நெல்லும் கொட்டைமுத்தும் கலந்து 3 முறை உள்ளே இறைத்து பூஜைக்குரிய சாமரன்களை குறித்த இடத்தில் வைக்கவும். நல்ல முகூர்த்தத்தில் அலங்கரித்த பசுவை வலது கால் வைக்கும்படி அழைக்கவும்.

## வாசக்கால் பூஜை

தாத்ரு விதாத்ருப்யாம் நம :

## ஸ்தோத்ரம்

தாரயத்வம் மஹாபாஹு - நிர்மதோ விஸ்வகர்மணு

தாபிதோ சுபயோநித்யம் ம ம கே ஹம் க்ஷமு பவ -

என்று வாசக்கால் பூஜை செய்து

அபஸ்ஸர்பம்துதே பூதா யே பூதா புவிஸம் ஸ்திதா :
யே பூதா விக்னகர்த்தாரஸ்தே ந : ஸ்யம்து சிவாஜ்ஞயா

என்று சொல்லி வெள்ளை கடுகை 4 பக்கமும் இறைத்து பூத பிசாசுகளை அகற்றி - பசுசாணம் - கோமயம் - பால் - தயிர், நெய் 5-ம் கூட்டி 2 முழம் சதுரமாக மெழுகி கோலமிட்டு கலஸ ஸ்தாபனம் செய்யவும். வாசக்கால் பூஜை சங்கல்பம் ஏவங்குண விசேஷண - விசிஸ்டாயாம் - அஸ்யாம் சுப திதௌ - உபாத துரித க்ஷயத்துவாரா ஸ்ரீ பரமேஸ்வர ப்ரீத்யர்த்தம் - தர்மார்த்த - காம மோக்ஷ சதுர்வித பலபுருஷார்த்த ஸித்யர்த்தம்ச க்ரஹப்ரவேசாக்யம் - கர்மகரிஷ்யே.

## வாஸ்து சங்கல்பம்

சுபயோக சுபகரணயுக்தாயாம் - அஸ்யாம் சுபபுண்ய காலே அஸ்மாகம் ஸஹ குடும்பானும் - க்ஷேமஸ்த்தைரிய வீரிய விஜயா, பயூரா ரோக்ய, தனகனக வஸ்துவாகன, புத்ர, பவுத்ராபி, வ்ருத்யர்த்தம் மமோபாத்த துரிதக்ஷயத்துவாரா, ஸ்ரீ பார்வதி பரமேஸ்வர ப்ரீத்யர்த்தம், நூதனக்ரஹப்ரவேசாங்க நாம்தி சமாராதனுக்யம், கர்மகரிஷ்யமாண : க்ரஹப்ரவேச லக்ன காலே ஆதித்யானும், நவானும், க்ரஹாணும், மத்யே யே யேக்குஹா அரிஷ்டஸ்தானே ஹுஸ்திதா : தேஷாம் க்ருஹாணும், அனுகூலத்வ சித்யர்த்தம் - யே யே க்ருஹா, சுபஸ்தானே ஹுஸ்திதா : தேஷாம் க்ருஹானும், அத்யம்த சுபபல, ப்ராப்த்யாத்தம் ச நவக்ரஹ பூஜாக்யம், கர்ம கரிஷ்யமாண : ப்ரதானும் வ பூத, வாஸ்து தேவதா, முத்திஸ்ய வாஸ்து தேவதா, ப்ரியர்த்ம், வாஸ்துகலஸ ஸ்தாபனம் கரிஷ்யமாண : வாஸ்து மர்ம சம்தானுய அகோரமூர்த்தி ஆவாஹனுர்த்தம், அகோர கலஸ ஸ்தாபனம் கரிஷ்ய மாண : - அஸ்மின்க்ருஹே சாஸ்வதைஸ்வர்ய, ஸ்த்ரீகரணுர்த்தம் மஹாலக்ஷ்மி ஆவாஹனம்ச, கரிஷ்யமாண :, பஞ்சப்ரம் மதேதா உத்திஸ்ய பஞ்ச ப்ரம்மா தேவதா, ப்ரீத்யர்த்தம், பஞ்ச கலஸ ஸ்தாபனுக்யம், புண்யா வசனகாலே வாஸ்து நவக்ரஹ சாந்திஹோமம், கர்மகரிஷ்யமாண :,

